திருவாமாத்தூர்-கௌமார சபை வெளியீடு-83.

உ
சிவமயம்.



# தில்லைபாதி - நெல்லைபாதி

ஆசிரியர் :
மகான்-வண்ணச்சரபம்
அருள்மிகு-தண்டபாணி சுவாமிகள்.



அருள்மிகு - தண்டபாணி சுவாமிகள் விழா
நினைவு மலர்.

உ
சிவமயம்.

# தில்லைபாதி - நெல்லைபாதி



ஆசிரியர் :
மகான்–வண்ணச்சரபம்
அருள்மிகு - தண்டபாணி சுவாமிகள்
திருவாமாத்தூர்.



8—1—67–ல் சென்னை–விருகம்பாக்கம்
ஆவிச்சி உயர்நிலைப்பள்ளியில்
**அருள்மிகு – தண்டபாணி சுவாமிகள் விழா**
நிகழ்ந்தபோது
திருமுருக - கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவர்களால்
வெளியிடப்பட்ட மலர்.



பொருளுதவியாளர் :
விழுப்புரம்–கீழ்ப்பெரும்பாக்கம் பொறிக்கலை காண்டிராக்டர்
திரு. V. சண்முகம் பிள்ளை அவர்கள் குமாரர்
நகராட்சி பொது மராமத்து இலாகா காண்டிராக்டர்
திரு. S. தண்டபாணி அவர்கள்

உ

குருவே துணை.

# முன்னுரை.

வெண்பா.

**தில்லையொரு பாதி திருநெல்லை பாதியென**
**அல்லையவிர் கண்டத் தரன்தலத்தின்-எல்லையில்சீர்**
**பப்பாதிப் பாட்டிலுறப் பாடல்ஐம்பத் தொன்றில்விண்டான்**
**கைப்பாற்றண் டம்புணைம கான்,**

இந்தத் துதிநூல், சோழ நாட்டுக்கும் பாண்டி நாட்டுக்கும் தொடர்புகொண்டு, ஆங்கு நிலவும் சிவபிரான் திருவருளை விளக்கி, வேறுபிரிக்க முடியாதபடி ஒரு பாட்டின் முற்பாதியில் தில்லைத் தலத்தினை விளக்கி, அத்தலத்துப் பெருமானுடையது தலம் தில்லையே என்ற சொல்லைத் தனிச்சீரிற்காட்டி[illegible], அத்தனிச்சீரின் பொருளையே எடுப்பாகக்கொண்டு, பிற்பாதியில் திருநெல்வேலியின் சிறப்பைக் கூறி அந்தப் பெருமானிடம் நெல்லையே என்று முடிக்கும் முறையில் ஒவ்வொரு பாடலும் அமைந்துள்ளது.

என்னை ? தில்லையே நாதன் இடம் எனவும், நாதனிடம் நெல்லையே எனவும் கண்டுகொள்க.

பாட்டின் தொகையும் நூறு என்ற அளவிலின்றி அதன் பாதியான ஐம்பதின்மேல் ஒரு பாட்டுடையதாய் இயற்றப்பட்டுள்ளது ஐம்பத்தொன்று என்ற எண் ஒப்பற்றது. அக்கரங்கள் (வடமொழியில்) ஐம்பத்தொன்று. நடராசமூர்த்தம் ஷி எண்ணின் சிறந்த உட்பொருளை உடையது. "அகரமுதலே எனக்குலவும் ஐம்பத்தொன்றும் அக்கரமும்" என்பர் இந்நூலியற்றிய சுவாமிகள் பழனித் திருவாயிரம் பிள்ளைத்தமிழில். சிதம்பரச் சக்கரம் ஐம்பத்தொரு எழுத்தினைக்கொண்டது. அருணகிரிநாத சுவாமிகளியற்றிய "கந்தரநுபூதி நூல்" ஐம்பத்தொரு பாடலையுடையது. "அகரமுதலென நிலவும் ஐம்பத்தொர் அக்கரமும்" என்பதும் இக்கருத்தேயாம்.

இந்நூல் கடைச்சங்கப் புலவர்களிற்றலைமைபெற்ற நற்கீரர் "கயிலைபாதி, காளத்தி பாதி" என்று பாடியுள்ள நூலை ஒட்டியமைந்தது. காளத்தி "பூலோக கைலாயம்" எனப் போற்றப்பெறுவது. இருதலமும் ஒத்த முறையாற் சிறந்ததுபற்றி ஒரே கவியில் இரண்டையும் கலந்து பாடினர். அதுபோன்று, ஐம்பெருஞ் சபைகளில் செம்பொன் அம்பலம் என்றசொல் பொன்னுக்கும்,

தாம்பிரத்துக்கும் ஒப்புமையாயதுபோல் இரு சிறப்புமுடைய தில்லை நெல்லைத்தலங்களை இணைத்துக் கூறினர் சுவாமிகள்.

நற்கீரர், கயிலை பாதி, காளத்தி பாதி நூல் பாடினரென்ற கருத்தை இந்நூல் ஆசிரியரான தண்டபாணி சுவாமிகள் தாமியற்றிய புலவர் புராணம் நற்கீரர் சருக்கத்தில் (21 சருக்கம்) கவி 7-ல் "தூயக யிலையுங் காளத்தியுங் கலந்தோர் துதிப்பனுவல் சொல்லிவைத்தான்" என்று கூறுகின்றனர்.

இவர் பாடிய பாட்டெழுதிய ஏட்டுப் புத்தகமே ஐம்பதுவரை யுளது. மொத்தப்பாடல் ஐம்பதாயிரத்தின் மேற்பட்டவையாம். இவை யாவும் ஒரேதடவையிற் பாடியும், அவராலேயே அழகுற எழுதப் பெற்றவை. அதிற்கண்டதே இந்தத் தில்லைபாதி நெல்லைபாதி நூல் ஆகும்

பாதிப்பாட்டில் இரு தலத்தையும் இணைத்துப் பாடுவதில் நற்கீரரும் சுவாமிகளும் இன்பங்கண்டிருப்பர்போலும். தில்லை, நெல்லை, பொற்சபை, செம்பொன்சபை என்றும், கயிலையும் காளத்தி யும் ஒப்பானதையும் பெருமான் உரு ஒன்றில் சிவசத்தியான இரு வடிவின் ஒன்றிப்பையும், சோழ பாண்டிய மன்னர் தமிழை வளர்த்த முறையில் இருநாட்டின் ஒற்றுமையும் போன்ற பல இனிய பண் பினைக்கண்டு இப்படிப் பாடினர்போலும் எனக்கருத இடமிருக்கிறது. பாதி என்ற முறைக்கேற்ப ஐம்பதளவில் முடித்தனர்போலும்.

— இதன் கருத்தை விளக்குமுறையில் சிறு குறிப்பும் அமைக்கப் பட்டிருப்பதால் படிப்பவர் பொருளையறியத் துணைபுரியும். பொது வாகப் பாடல்கள் எளிய நடையில் உள்ளதேயாம்.

இந்நூலின் அருமை உணர்ந்து பதித்து ஸ்ரீ தண்டபாணி சுவாமி கள் விழாவில் வழங்கியவர் விழுப்புரம் நகராட்சி பொது மராமத்து இலாகா காண்டிராக்டர் திரு. S. **தண்டபாணி** அவர்களாவர். அவர்களுக்கும், அவரைச் சார்ந்தவர்களுக்கும் எல்லா நலமும் உண்டாக அருளுமாறு முருகக்கடவுளையும், ஸ்ரீ தண்டபாணி சுவாமி களையும் வேண்டி வாழ்த்துகிறேன்.

இன்னணம்,

சுவாமிகள் பெயரர்

**தி. செ. முருகதாச ஐயா,**

கௌமார மடாலயத் தலைவர்,

திருவாமாத்தூர்.

விழுப்புரம்,

8—1—1967.

# ப தி ப் பு ரை.

—∞:∞—

இந்நூலை இயற்றிய ஆசிரியர் மகான்–வண்ணச்சரபம் அருள் மிகு–**தண்டபாணி சுவாமிகள்** என்ற பெரியாராவர். இவர் திருநெல்வேலியில் சைவ வேளாண் மரபில் 1838–ல் அவதரித்து, இளமைமுதல் முருகன் திருவருளால் வேற்பூசைசெய்து, ஆறெழுத் தருமறை செபித்து, தமிழ்க் கவிகள் பாடும் திறன் வாய்க்கப்பெற்று, புலவர் புராணம், தமிழலங்காரம், அறுவகை இலக்கணம் என்பன போலும் நூல்கள் இயற்றினர். தலசேவை செய்யும் காலத்து ஆங் காங்குள்ள இறைவன்மீது பாடிய தோத்திர நூல்கள் பலவாகும். இவ்வாறு இவரால் பாடப்பெற்றவைகளைத் தாமே பனையோலைச் சுவடியில் எழுதியும் வைத்தனர். அவைகளுள் தற்போது ஐம்ப தாயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்கள் பாதுகாப்பிலுள்ளன. செல்லு மிடங்களில் சீவகருணையை வளர்த்தார். இவரிடம் பாடம் கேட்டும், உபதேசம் பெற்றும் பயன்பெற்றவர் பலராவர். சமய பேதமின்றித் திகழ்ந்த இவர் இறுதியில் திருவாமாத்தூர்ச் சிவதலத்தில் தங்கித் தவம்புரிந்து 1898-ல் அருட்சமாதி கொண்டனர்.

இவர் நூல்களை வெளியிட ஓர் குழுவமைத்துச் செயல்பட்டு வருகிறது. அம்முறையில் நூல் வெளியீட்டுக் குழுத்தலைவரான விழுப்புரம் நகராட்சி மன்றத்தலைவர் டாக்டர் திரு. **D. தியாகராசன்** அவர்கள் விரும்பியவாறு இந்நூலைத் தம் பொருட்செலவில் வெளி யிட முன்வந்த அன்பர் விழுப்புரம் பொறிக்கலை காண்டிராக்டர் திரு. **V. சண்முகம் பிள்ளை** அவர்கள் குமாரரும், நகராட்சி பொது மராமத்து இலாகா காண்டிராக்டருமான விழுப்புரம் கீழ்ப்பெரும் பாக்கம் திரு. **S. தண்டபாணி** அவர்களாவர். அவர்கள் தொண் டினைப் பாராட்டுவதோடு அவர்களுக்கும், அவர்கள் குடும்பத்தின ருக்கும் முருகப்பெருமான் திருவருள் மேன்மேலும் உண்டாவதாக என வாழ்த்தி வேண்டுவேனுக.

அன்பன்,

**வித்துவான். தி. மு. சங்கரலிங்கம்,**
தமிழாசிரியர்,
கௌமாரமடாலயம்.

திருவாமாத்தூர்,
விழுப்புரம்.
8—1—1967



மகான்–வண்ணச்சரபம்

**அருள்மிகு–தண்டபாணி சுவாமிகள்**

28-11-1839. 5-7-1898

உ

சிவமயம்.

# தில்லைபாதி - நெல்லைபாதி

### காப்பு - வெண்பா.

பாண்டரங்கங் கண்டுதில்லை பாதிநெல்லை பாதிசொல்லி
வேண்டலெய்தத் தூண்டல் விநாயகனும்—நீண்டவடி
வேலோனும் ஆனி விழாச்சேவை வேண்டிவரும்
மேலோர் பதத்துகளு மே.

## நூல்.

### வெண்பா.

பூதலமும் மீதலமும் போதின்மறைப் புங்கவனும்
சீதரனும் போற்றுதிருத் தில்லையே—நாதனிடம்
கோடிநலம் நீடுதென்றற் குன்றுதவு செந்தமிழால்
ஈடில்வள மார்ந்தநெல்லை யே. 1

பத்தர்களும் முத்தர்களும் பாவலரும் காவலரும்
சித்தர்களும் நத்துதிருத் தில்லையே—அத்தனிடம்
பஞ்சா யுதனேர் பலர்வாழும் பான்மையினல்
எஞ்சாத சீர்கொள்நெல்லை யே. 2

நீதி மறையோர் நெருங்குதலால் நித்தநித்தம்
தீதிலறம் ஓங்குதிருத் தில்லையே—ஆதியிடம்
செந்நா வலரும் திருவேடத் தொண்டர்களும்
எந்நாளும் மன்னுநெல்லை யே. 3

வாசவனும் வேதியனும் மாயவனும் மற்றனைய
தேசர் எவருமெச்சும் தில்லையே—ஈசனிடம்
கானவர்போற் பல்லுயிர்கட் காதிஅவற் னூன்அருந்தும்
ஈனருக்கா காதநெல்லை யே 4

பையரவத் தாள்முனியும் பாய்புலிக்கால் மாதவனும்
செய்யகதி பெற்றுயர்ந்த தில்லையே—ஐயனிடம்
தாம்பிரமன் ருடும் சரணமே தஞ்சமென்று
யாம்பிறந்த தாயநெல்லை யே. 5

அல்லல் வினையைவென்றிட்(டு) ஆனந்த வீட்டினிடம்
செல்லவிழை வார்புகழும் தில்லையே—நல்லனிடம்
விண்ணும்மண்ணும் நொந்து வெறுப்பனசெய் வாரைவெல்சீர்
எண்ணுமவர் வாழுநெல்லை யே. 6

கீர்த்தி அறம்பெருமை கேடில்முத்தி என்பவற்றைச்
சேர்த்திகத்தில் நல்கவல்ல தில்லையே—மூர்த்தியிடம்
செந்திருவும் வெண்திருவும் சேர்ந்துவிளை யாடுகையால்
இந்திரனூர் ஒல்குநெல்லை யே. 7

பாரணங்கு வாழும் பரிசே நனிவிழைவார்
தீரர்வந்து போற்றிசைக்கும் தில்லையே—வீரனிடம்
காரார் பொதியைக் கலசமுனி வன்தவம்போன்(று]
ஏரார் பொருநைநெல்லை யே. 8

புத்தர்முத லோர்வரினும் புண்ணியவெண் ணீறணியும்
சித்தமுண்டா கத்திகழும் தில்லையே—அத்தனிடம்
பொங்காழி யன்ன புனிதத் தவத்தோரை
இங்கா தரிக்குநெல்லை யே. 9

சுத்தபர ஞானச் சுகமடைந்த தூயோர்கள்
சித்தனந்தம் செய்ததிருத் தில்லையே—நித்தனிடம்

கண்டிகையும் நீறும் கவினப் புனைவார்க்கே
எண்திருவும் நல்குநெல்லை யே. 10

பக்கலுறை வார்களொடு பல்கோடி ருத்திரரும்
செக்கரெனக் கூத்தாடும் தில்லையே!—நக்கனிடம்
கண்ணிஅறி யாராக் கருமமே தெய்வமென்றன்(று)
எண்ணினரைக் காய்ந்தநெல்லை யே. 11

மாற்றரிய பொற்பணியும் மாமணியும் மான்மதச்செஞ்
சேற்றமிழும் வீதியுடைத் தில்லையே—ஆற்றலது
கூற்றனைக்கொன்(று) அன்றோர் குழவியினைக் காத்தபிரான்
ஏற்றருந்தச் செய்தநெல்லை யே. 12

வல்ல புலவோரும் மாதவரும் வந்துவந்து
தில்லனைத்தும் பெற்றுவக்கும் தில்லையே—நல்லதலம்
தோணான் கினராகித் தும்பியொன்றைக் கொன்றுரித்த
ஏணார் மருவுநெல்லை யே. 13

பொன்னை விழையாதார் புந்திநலம் போல்வளரும்
தென்னையொடு வாழைமலி தில்லையே—முன்னையிடம்
மூங்கி லொடுகரும்பு முத்துகுக்கக் கண்டுவிண்ணோர்
ஏங்கியசீர் ஓங்குநெல்லை யே. 14

கந்தை முறிக்கும் கடகளிறூர் காவலவர்
சிந்தையொல்க நீடுசெல்வத் தில்லையே—நிந்தையில்லூர்
பந்தைநிகர் கொங்கையுமை பார்க்கப் பரதமுயன்(று)
எந்தைவளர் கின்றநெல்லை யே. 15

கற்றணுகும் பாவலரைக் காசினியும் காணநுகர்
சிற்றம் பலம் குலவுந் தில்லையே—நற்றகைய(து)
ஆனந்தச் செப்புமன்றில் ஐம்முகத்தான் ஆடுதலால்
ஈனந் தவிர்ந்தநெல்லை யே. 16

பன்முறையும் கூடிப் பலவாப் பயப்படுத்தும்
சென்மவினை தீர்க்குமெழில் தில்லையே—நன்மையது
போயத்தம் கூப்பினர்க்குப் போராழி யான்புகழ்சேர்
ஈயத் தகுந்தநெல்லை யே. 17

ஆரியரும் விண்ணோர் அனைவோரும் அன்றுவப்பத்
தேரிழுத்த பாட்டணியும் தில்லையே—சீரியது
விண்டோய் தருக்குலங்கள் வெட்கவளர் வேய்அடிவாழ்
எண்டோட் பரமர்நெல்லை யே. 18

சந்திரனும் சூரியனும் தக்கன்மகத் து(டு)உதிரம்
சிந்தியழ வென்றபிரான் தில்லையே—முந்தியது
வேறினையொன் றின்றிஎதிர் வெய்யமுயல் மீதிலரன்
ஏறிநடம் ஆடுநெல்லை யே. 19

நன்ஞை கரீகமெய்தி நாய்நரிபோன்(று) ஊன்எலும்பு
தின்ஞதார் வேண்டுமெழிற் றில்லையே—என்ஞைசை
எட்டு வகைப்பொருளும் ஈசனே என்றறிந்தார்க்(கு)
இட்டுவப்பார் வாழுநெல்லை யே. 21

நாரணனும் நான்முகனும் நந்துகின்ற நாள்வரினும்
சீரணமெய் தாததிருத் தில்லையே—காரணனூர்
தாயார் வயிற்றிலின்னம் சந்ததியா கும்துயரம்
ஏயார் பிறக்குநெல்லை யே. 21

மோகாந்த காரம்வந்து மூடா தொழியும்வண்ணம்
தேகாபி மானம்விட்டார் தில்லையே—சாகானூர்
பந்தாடு மாதர் பனிவேர் அரும்புநுதல்
இந்தா விளங்குநெல்லை யே. 22

வந்த படிபாடும் வாயுடைய மாதவர்தம்
செந்தகைய பாடல்மலி தில்லையே—நந்தலில்லூர்

ஆதி முனிக்கோன் அடியார்க்(கு) அடிமைசெய்யா
ஏதிலார்போற் ருதநெல்லை யே. 23

கள்ளமின்றி வானிற் கரைந்தார் கனிதமிழாம்
தெள்ளமுத்ச் சீர்மணக்கும் தில்லையே—வள்ளல்கொள்ளூர்
தென்னர்களிற் கூனிமிர்ந்த சீரியன்தான் செய்தபணி
இன்னம் இலகுநெல்லை யே. 24

திங்கணிகர் சங்கத் திரளூலவும் வாவிதொறும்
செங்கமலம் பூத்ததிருத் தில்லையே—சங்கரனூர்
முத்தாரம் காட்டும் முகிழ்முலையார் மோகமிஞ்சி
எய்த்தாரும் ஏத்தும்நெல்லை யே. 25

மக்கள் உருவ மரையனையார் இன்றிளந்த்
திக்கவரும் போற்றுமணித் தில்லையே—மிக்கதலம்
பாற்றுணவு கொள்வார் பகையாய பத்தர்நெஞ்சில்
ஏற்றுலவும் ஈசன்நெல்லை யே. 26

மங்களமும் நல்ல மணமும் மகத்துவமும்
திங்கள்தொறும் காட்டுகின்ற தில்லையே—அங்கணர்ஊர்
தங்கமொல்கும் அக்கும் தவளமுழு நீறுமணி
எங்களபி மானநெல்லை யே. 27

பார்த்தன் அடித்ததற்குப் பாசுபதம் ஈந்துமகிழ்
தீர்த்தர் மருவுதிருத் தில்லையே—சீர்த்ததாம்
வெட்டும் இடையனுக்கு மேலுலகில் மேவுமெய்ச்சீர்
இட்டுவப்பார் உற்றநெல்லை யே. 28

அங்கடைந்த ஆனந்தத் தால்அவச மாகிஎன்றும்
செங்கண்நெடு மால்கிடக்கும் தில்லையே—புங்கவரூர்
வண்ணஇதழ்க் காந்தி மதித்தாய் வழங்கறத்தால்
எண்ணருஞ்சீர் தோய்ந்தநெல்லை யே. 29

பல்வரமும் வேண்டியவா பத்தருக்கெல் லாம்கொடுக்கும்
செல்வச் சிவகாமி தில்லையே—நல்வளத்தூர்
அள்ளல்விட முண்ட அனவரதத் தான்அரன்பால்
எள்ளரும்சீர் எய்துநெல்லை யே. 30

பாலாழி யிற்றுயிலும் பச்சைநிற மோகினிநேர்
சேலார்கண் ணார்மலியும் தில்லையே—மேலாமூர்
மாட்டு மனைவியொடும் மைந்தனொடும் ஏறுமவர்
ஈட்டுபுகழ் காட்டுநெல்லை யே. 31

அட்டவித மூர்த்திகளை அஞ்செழுத்தை நிந்தைசெய்யாச்
சிட்டர் பலர்வாழும் தில்லையே—கட்டழகூர்
கொல்லா விரதியர்தம் கூட்டமிக நீடுதலால்
எல்லாரும் மெச்சுநெல்லை யே. 32

மிக்கழகார் சோலைஎங்கும் வீதியெங்கும் வீடெங்கும்
சிக்க மயிலாடும் தில்லையே—முக்கணனூர்
கல்லைநிகர் நெஞ்சறியார் காதும் தொழிலறியார்
இல்லைஎன்னார் வாழுநெல்லை யே. 33

நாற்றகைய பேற்றில் நலந்தீ(து) அறியாரைத்
தேற்றவல்லார் பற்பலர்வாழ் தில்லையே—கூற்றனஞ்சூர்
அன்பர்க்(கு) எளியாராய் அந்தரத்தோர் ஆதியர்வெள்
என்பணிந்தார் ஆளுநெல்லை யே. 34

வீட்டுக்(கு) அலந்துதொண்டு வேணமட்டும் செய்வார்க்(கு)ஓர்
சீட்டுக் கிடைக்குமெழிற் றில்லையே—பாட்டுயரூர்
கும்ப முனிவன் குறித்தபெரு வாழ்வதனை
இம்பரிற்பெற் றுய்ந்தநெல்லை யே. 35

பொய்த்துளநூல் நம்பிப் புழுங்குநர்க்கும் பொற்சபையிற்
சித்துருவம் காட்டுகின்ற தில்லையே—தத்துவனூர்

செச்சையொடு பச்சைபுணர் சீருருவம் நாடுமவர்க்(கு)
இச்சைமுற்றும் நல்குநெல்லை யே. 36

சந்தா கரச்செந் தமிழ்பாடத் தக்கவர்க்குச்
சிந்தா குலம்தவிர்க்கும் தில்லையே—நந்தாவூர்
தக்கவயற் ருேறும் தரளம்உகும் நெற்பயிர்ச்சீர்
இக்கனைய ஆகுநெல்லை யே. 37

வெங்கட் கொலைப்புலையர் வேரறுக்கும் வீரர்புகழ்
திங்கட் சடைப்பெருமான் தில்லையே—எங்களூர்
பண்டை வினையழியப் பாடுபடும் பத்தர்கட்கும்
இண்டையணி ஈசன்நெல்லை யே. 38

மாதமெல்லாம் மும்மாரி வந்துவந்து பெய்வதனுற்
சீத மிகப்பொலியும் தில்லையே—கோதறுமூர்
காமாத்தி நல்கும் கழைமதனன் தன்னைஎரித்(து)
ஏமாக்கும் எந்தைநெல்லை யே. 39

நன்றைஅத ன்ஏனையினை நாடிநைந்த நாவலவர்
சென்றையம் தீர்க்கும்நல்ல தில்லையே—கொன்றையனூர்
மைக்காலன் தன்பகட்டு வாகனத்தின் வன்மனமும்
எக்காலும் அஞ்சுநெல்லை யே. 40

தாமாகச் சந்தத் தமிழ்ப்புலவர் தம்கவிபோல்
தேமாங் கனிஉதிரும் தில்லையே—கோமானூர்
மாற்றரும்சீர்த் தென்பொதியை மாமுனிவன் ஆதியரால்
ஏற்ற மலியுநெல்லை யே. 41

நாற்றுக் கழனி நடுக்கும் குமப்புரையும்
சேற்றுக் கயலுகளும் தில்லையே—போற்றுநல்லூர்
கூற்றுக்(கு) எமனுக் கொலைமுயல்வார்க்(கு) இன்னுயிராம்
ஏற்றுப் பதாகைநெல்லை யே. 42

பூத்தார் அணிகுழலார் பொற்புநடை கண்டுகண்டு
சேத்தாள் அனம்பயிலும் தில்லேயே—கூத்தானூர்
பன்னரிய செந்தமிழாற் பாடிப் பணியுமன்பர்
இன்னல்முற்றும் தீர்க்குநெல்லே யே. 43

அன்னம்விண்ணூர் தன்னேவிடுத்(து) அம்புயப்பூங்
கொட்டையினேத்
தின்ன வரும்வளமைத் தில்லேயே—முன்னவனூர்
பொல்லாங்கு நோய்வறுமை போலும் அவைசிறிதும்
இல்லார் மருவுநெல்லே யே. 44

விம்மு கனியும் விரிமலர்ப்பைந் தாதும்மிகச்
செம்மு பொழிவளேயும் தில்லேயே—ஐம்முகனூர்
துன்பம் தணந்து தொலேவரிய தாகியபேர்
இன்பம் கொடுக்குநெல்லே யே. 45

சொல்புலவர் சேகரனும் சுந்தரர்க்காத் தூதுமன்று
செல்புனிதர் மேவுதிருத் தில்லேயே—தொல்புகழூர்
அன்னேஎழிற் காந்திமதி அம்புயத்தாள் போற்றொருவற்(கு)
என்னேமக வாச்செய்நெல்லே யே. 46

தூய தமிழும் துகள்தீர் மறையும்மெச்சும்
சேயபுகழ் ஓங்குதிருத் தில்லேயே—நாயகனூர்
பெண்ணுளும் பாகப் பெருங்கோல மன்றிமற்றொன்(று)
எண்ணுதார் வாழுநெல்லே யே. 47

அம்புயத்தோன் சொன்னும் ஐஞ்செழுத்தை யன்றிநம்பாத்
தெம்புடையார் மன்னுதிருத் தில்லேயே—சிம்புள்மல்கூர்
சேரத்தா னுன சிவனே பரமெனச்சொல்
ஈரத்தார் மேவுநெல்லே யே. 48

விண்குறித்த தேவர்களும் வேதியரும் மாதவரும்
திண்குறளும் போற்றிசைக்கும் தில்லையே—எண்குணனூர்
பாகைநிகர் முத்தமிழும் பாடும் பணிபுரிவார்க்(கு)
ஈகை மலியுநெல்லை யே. 49

அக்கினியி னே(டு)உடுக்கை அங்கையனல் ஏந்தியரன்
தெக்கினிற்கால் வீசிநிற்கும் தில்லையே—முக்கியவூர்
பாவி கருமம் பரமென்று பல்பகையை
ஏவிரும் வாழ்ந்தநெல்லை யே. 50

மேலார்அ வாவியணி வேண்டலெய்தும் வீறுடைத்தாய்ச்
சேலார வாவியணித் தில்லையே—பாலானூர்
வேதங் களையும் வியன்கிளியும் மிக்குரைத்திட்(டு)
ஏதங் களையுநெல்லை யே. 51

முற்றிற்று.

## நூற்பயன்.

பத்தி மலிந்துதில்லை பாதிநெல்லை பாதிஎன
நத்தியஐம்பத் தோர்கவியும் நன்குரைத்தாற்–புத்திதரும்
சித்திதரும் அப்பாற் றிரும்பாது சொல்லுமுண்மை
முத்திதரும் மெய்என் மொழி.



உ
குருவே துணை.

# குறிப்புரையும் – அருஞ்சொற்பொருளும்.

காப்பு: 1 சிவபிரான் திரிபுரதகனம் செய்தபோது உண்டாகிய நீற்றினைத் தமது திருமேனியிற் பூசிக்கொண்டு ஆடிய கூத்து, பாண்டரங்கமெனப்படும். 2 மார்கழியில் திருவாதிரையைப் போலவே, தில்லையில் ஆனியிலும் தெரிசனச் சிறப்பு விழா நடப்பதையும், நெல்லையில் பெருவிழா ஆனியில் நடப்பதையும் குறிக்கும். மேற்கண்ட இருதலத்தும் இவ் விழாவையும் காணப் பெருந்திரளாக அன்பர் கூடுவர். ஆகவே அத்தகைய அன்பரது பாத தூசியெனக் குறிப்பிட்டுள்ளார்.

வெண்பா 1 (1) போது என்பது தாமரைப் பூவினைக்குறிக்கும். திருமகளை மார்பில் தரித்தமைபற்றித் திருமாலுக்கு சீதரன் எனப் பெயராயிற்று. ஸ்ரீதரன் என்ற வடசொல்லின் தமிழாக்கம் ஆம். (3) பொதியைமலை–தமிழ் அம்மலையில் உள்ள அகத்தியர் உண்டாக்கினரென்பது தெளிவு.

வெண்பா 2 (1) சங்கு–சக்கரம் – வில்–அம்பு – கோதண்டம் என்ற ஐந்து–ஐம்படை எனப்படும். இவை திருமால் கொண்டவை. நெல்லைக்கோவிந்தர் – தில்லைக்கோவிந்தர் என்ற பெயரில் பெரிய திருவுருவுடன் இரு தலங்களிலும் உள்ளதையும், திருமால்போன்று பெருஞ்செல்வர் வாழ்வதையும் குறிக்கும்.

வெண்பா 3 (1) அந்தணர்க்கேற்ற நியதி.

வெண்பா 4 (1) இந்திரன் (2) தேயத்துள்ளவர்-தேயம், தேசம் ஒரு பொருள். (3) வேடர் (4) கொன்று. காட்டில் திரியும் வேடர்களே உயிர் வதைத்து உண்பவர்கள். நாட்டிலுள்ளவரும் அது புரிவதால், கானவர்போல் என உவமித்தனர்.

வெண்பா 5 (1) பாம்பின் வாயில் உள்ள பற்களில் விடம் தங்கும் பையுள்ளதால், பை அரவு எனப் பெயராயிற்று. பாம்பின் உடலிற் பாதியாயுள்ளவர் பதஞ்சலி முனிவர். புலிப்பாத முடையவர் வியாக்கிரபாதர். இவர்கட்காக இறைவன் திருநடம் செய்தனர்

தில்லையில். வியாக்கிரம்-புலி. (2) தாம்பிரசபை நெல்லையிலுள்ளது. இது பஞ்ச சபையிலொன்று. பொற்சபை (தில்லை) வெள்ளிச்சபை (மதுரை) தாம்பிரச்சபை (நெல்லை) இரத்தினசபை (திருவாலங்காடு) சித்திரசபை (திருக்குற்றாலம்). (3) இந்நூலாசிரிய சுவாமிகள் தோன்றிய தலம் நெல்லை என்பதைக் குறிப்பிடுகின்றார். காழியை ஞானசம்பந்தர் அபிமானித்துக் கூறுவதுபோல, தன் பிறப்பின் தலம் நெல்லை என்பது உரிமையாற் கூறியது.

வெண்பா 6 (1) பிறப்பு இறப்புக்கு ஆதரவாயிருப்பது வினைகள். இவை நீங்கினாலன்றி, திருவருளின்பம் வராது. (2) அறத்துக்கு மாறான தீச்செயல்.

வெண்பா 7 (1) இந்திரனுலகம், இன்ப நுகர்ச்சிபோன்ற புலனுணர்வைமட்டும் தரும். கல்வியின்பம் ஆங்கில்லை. கடவுள் வழிபாடுமில்லை. நெல்லையில் இவை உள்ளதால் ஒல்குவதாம்.

வெண்பா 8 (1) அகத்தியர்–குடம் (கலசம்) இவர் தோன்ற இருந்ததென்பதாம். பொருநை – தாம்பிரபரணி ஆறு. இது திரு நெல்லையில் உள்ளது.

வெண்பா 9 (1) திருநீறணியாத புறமதத்தினருள் புத்தர் ஒரு பகுதி இவர்கள் குழுமி தில்லையில் தமது மதத்தைப் பரப்ப வந்தபோது, மணிவாசகர் அவர்களை ஊமையாக்கி, ஊமைப்பெண்ணைப் பேசவைத்து, சைவப் பெருமையை விளக்கி, திருநீறணியச்செய்த சிறப்பு தில்லைக்குரியது.

வெண்பா 10 (1) செல்வம் எட்டுவகை. தனம், தானியம், தைரியம், வீரம், சவுந்தரியம் (அழகு), வித்தை, புகழ், அரசபதவி என்பன. அட்ட ஐஸ்வரியம் என்பதும் இதுவே.

வெண்பா 11 (1) சிவந்த நிறம் – இறைவன் சிவப்பு நிறம் உடையவர். செம்மேனி அம்மான்–(தேவாரம்) (2) கருதி–எல்லா வல்லமையுடையவன் என்றறியாமல், கருமம் (அவரவர் செய் தொழில்) நல்லவும் கெட்டவுமான பலனையுதவும். கடவுள் ஒருவன் வேண்டாமென எண்ணி இறைவனைக்கொல்ல, வேள்விசெய்து, பாம்பு, புலி முதலியவற்றை வரச்செய்து ஏவியவர் தாருகவன முனிவர்கள் அவர்களை இறைவன் ஒறுத்தருளினார். தாருகவனத் தலம் திருநெல்வேலி என்பது மரபு என்ற கருத்து.

வெண்பா 12 (1) மாமணி – இரத்தினம். (2) கத்தூரி. (3) பிட்சாடன அவதாரம் (தல வரலாறு) குழவி–மார்க்கண்டர்.

வெண்பா 13 (1) விருப்பம் (2) தோள் நான்கு என்பது தோணுன்கு என வந்தது.

வெண்பா 14 (1) முதல்வன் (2) பொதுவாகக் கரும்புடன் மூங்கில் வளமுடையதாயினும், திருநெல்வேலித்தலம் மூங்கிலைத் தலவிருட்சமாயுடையது.

வெண்பா 15 (1) கட்டுத்தறி (2) மதயானை (3) நடனம்.

வெண்பா 16 (1) நுகர்தலாவது, தன்னிடத்து ஒற்றுமை கொள்ளல். மாணிக்கவாசகர் ஐக்கமுத்தியுற்றது குறிப்பு.

வெண்பா 17 (1) போய் அத்தம் கூப்பினர்க்கு – சென்றுகை கூப்பி வணங்குமவர்க்கு (2) போர்ஆழி–சமர்புரியும் சக்கரம்.

வெண்பா 18 (1) அந்தணர்(தில்லை மூவாயிரவர்) (2) சேந்தனர் பாடிய திருப்பல்லாண்டு. நடராசப்பெருமான் தேரிலிருக்க இழுப்பா ரின்றி, ஷ பாடல் பாடியதும் நான்கு வீதியிலும் தேர் சுற்றிவந்தது. (3) வேய்அடி-மூங்கிலின்கீழ்-திருநெல்வேலியில் இறைவன் மூங்கி லடியில் தோன்றினன்.

வெண்பா 21 (1) மண், நீர், நெருப்பு, காற்று, வெளி, சந்திரன், சூரியன், உயிர் இவை எட்டுமாகி இறைவன் உள்ளா ரென்பது.

வெண்பா 22 (1) மோகஅந்தகாரம் – ஆசையாகிய இருள். உடலபிமானமே ஆசைக்குக் காரணம். ஆசையில்லையேல் இரு ளில்லை. இருளில்லையேல் பிறப்பில்லை என்பதாம். (2) நெற்றி (3) சந்திரன். மாதர் நெற்றி. அரைவட்டச் சந்திரன்போன்றதென் பது உவமை.

வெண்பா 23 (1) செய்யுளிலக்கணமறிந்து, சொல்சீர், எதுகை, மோனை, ஆதியன தேடியலையாமல் இறைவனருளைத் துணைகொண்டு யாவும் இயல்பாயமையப் பாடுவோர் மாதவர். அவர் தம்பாட்டு மிகுதியுமுடையது தில்லை. இவர் தில்லைத் திரு வாயிர முதலியன பாடியுள்ளனர். தேவாரம், திருவாசகம், கோவை, திருமுறைப் பாடல்கள் பலவும் கொள்க.

வெண்பா 24 (1) மாணிக்கவாசகர் (2) நின்றசீர் நெடுமாற பாண்டியன்.

வெண்பா 25 (1) சங்குகளின் வெண்ணிறம் சந்திரன் ஒப்பென்பது (2) இளைத்தவர்.

வெண்பா 26 (1) மிருகம் உருவில் மனிதராயும். செயலில் மிருகமாயுமுள்ளவர், பகுத்தறிவற்ற மக்கள். இவர், வஞ்சம், பொருமை, ஊன் உணவு, எளியவரை வருத்தலாதியவுள்ளோர் மிருக இயல்பினர். எனவே அவர் தில்லையைப் போற்ருர். (2) பாறு உணவு–பருந்தின் உணவு (ஊன்).

வெண்பா 27 (1) உருத்திராக்கம் அதைக்கண்டு தங்கம் நாணும். இது சிவன் கண்ணிற்ருேன்றியது. கள்வர் கொள்ள நினையாதது. அணிந்தவரை நன்னெறிப்படுத்துவது. தங்கத்துக்கு இவையில்லை என்க. (2) வெண்ணிறத் திருநீறு (3) எங்கள் என்பது இனம்பற்றிய அடியார்கள்.

வெண்பா 28 (1) அருச்சுனன் (2) பசுபதியான இறைவன் உதவுதலின் அம்பு. பாசுபதம் என்ருயிற்று. (2) தூய்மையானவர். கங்கையை யணிந்தவர் எனலுமாம். (4) பால்கொண்டு செல்கால் நடுவழியில் மூங்கில் முளையால் காலிடறிப் பால் சிதறும் வழக்க முணர்ந்து, யாதவன் மூங்கிலை வெட்ட, கீழே சிவலிங்கம் உள்ளது கண்டான். அதை வெளிப்படுத்திய அவன் மேலுலகம் செல்வ தானுன். அத்தகையது திருநெல்வேலி.

வெண்பா 29 (1) திருமால் சயனவடிவிற் காட்சி தருவது பெருமான் திருக்கூத்துக்கண்டு பரவசமாயினர் (2) சிவந்த பவளம் போன்ற உதடுகள்.

வெண்பா 30 (1) சேறு – கடலில் சேறு உண்டென்பதை இனம்பற்றிய கருத்து. பாற்கடலில்விட மேற்பட்டது. அங்குச் சேறு இல்லையாதலால் (2) ஒரு வீதி (இவர் பிறந்த வீடுள்ளது) முகப்பில் உள்ள விநாயகர் அனவரததான விநாயகர் எனப்பெறுவர்.

வெண்பா 31 (1) பக்கத்துள்ள உமையவள்.

வெண்பா 32 சிக்கம்–குடுமி (கொண்டை) மயிலின் தலையில் உள்ளது சிகை.

வெண்பா 34 (1) சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம். அறம், பொருள், இன்பம், வீடு எனவும் கொள்க (2) தேவர்கள்.

வெண்பா 35 (1) முத்திபெறும் பேராசையுற்று (2) ஒப்பற்ற இறைவன் கைச்சீட்டு. பெத்தான் சாம்பானுக்கு முத்தி தரும்படி உமாபதியாருக்கு இறைவன் சீட்டுதவியது. 'அடியார்க்கெளியவன்' என்ற பாட்டெழுதிய சீட்டு. உமாபதியார் வரலாற்றறிக. புலவர் புராணம் (3) இவ்வுலகில்.

வெண்பா 36 (1) அந்நிய சமயநூல் (2) ஞானநடக்காட்சி (3) நீறு (4) உமையாளின் பாதிஉரு.

வெண்பா 37 (1) வண்ணச்சந்தமுடைய (2) துயரம் (3) கெடாத இயல்புடைய (4) முத்துகளை நெற்பயிர்கள் கரும்பு போல உதிர்க்கும் (நெல்முத்து) கரும்பில் முத்து விளையும். கரும்பு போல் செழிப்பாக வளரும் நெல்லை என்றுகொள்க. ஊர்-நெல்வேலியாகும்.

வெண்பா 38 (1) பற்றற்றவர்கட்கும் தலப்பற்றுண்டென்பதை ஆசிரியர் தாம் பிறந்த தலச்சிறப்பு கூறுகின்றூர். (2) ஓர்வகைப் பூமாலை.

வெண்பா 39 (1) காம இச்சை (2) கரும்பு வில்லுடைய மன்மதன் (3) பார்வதி மன அவாவுறுதல்.

வெண்பா 40 (1) ஏனை-மற்றதான தீமை (2) இருண்ட நிறத்து ஏமன் (3) ஆணெருமைக்கடா நெல்லையின் எல்லைவர அஞ்சுதல்.

வெண்பா 42 (1) எமனுக்கு எமனுகி உதைத்தவர் சிவபிரான். அவருக்கு இனியது இடபம். அவர்கொடி இடபம் வரைந்தது என்பதாம்.

வெண்பா 43 (1) சிவந்த காலையுடைய அன்னம்.

வெண்பா 45 (1) இறைவன் முகம் (5) அவை, ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதமென்பன.

வெண்பா 46 (1) செந்தினயகம்பிள்ளை. இவர் காந்திமதியம்மையருளால் இவரை மகவாப்பெற்றனர்.

வெண்பா 48 (1) சரபப்பறவை - சரபவடிவுடன் நரசிங்கத்தைச் சிவன் வென்றசெய்தி.

ஹனுமான் அச்சியந்திரசாலை, விழுப்புரம்.

## நூலாசிரியர் அருளிய முக்கிய நூல்களுள் சில.

| | | |
|---|---|---|
| புலவர் புராணம் (அச்சில்) | ... | |
| திருவரங்கத் திருவாயிரம் | ... | 2-00 |
| தமிழலங்காரம் | ... | 0-50 |
| திருவாமாத்தூர்த் தலபுராணம் | ... | 2-00 |
| கௌமார முறைமை | ... | 0-50 |
| தியானுனுபூதி (உரையுடன்) | ... | 0-50 |
| தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0-50 |
| சென்னை முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0-50 |
| சுவாமிகள் வரலாறு (உரைநடை) | ... | 0-50 |
| சடகோபர் சதகத்தந்தாதி | ... | 0-50 |
| தண்டபாணி விஜயம் | ... | 1-50 |
| அருணகிரிநாதர் புராணம் | ... | 1-50 |

மற்றும் பிற.

கிடைக்குமிடம் :—

**தி. செ. முருகதாச ஐயா,**
தலைவர்,
**கௌமார மடாலயம்,**
திருவாமாத்தூர்,
விழுப்புரம் P. O.

ஹனுமான் அச்சியந்திரசாலை, விழுப்புரம்.